உ

சிவமயம்

# இர[illegible]ன்மியம்

இந்து கலாவிரு[illegible]த்தாரின் கேள்விப்படி.

வட்டுக்[illegible]பரம்பரை பிரமஸ்ரீ

## சி. பாலசுப்ரமண்யஐயர்

அவர்களால் எழுதி

---

சங்கானை

சச்சிதானந்த யந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது

யாழ்ப்பாணம்.



---

1916 பங்குனி

# மு[illegible]

இரா[illegible]ான்மியமான தி யாழ்ப்பாணம் வட்[illegible]த்வட்ரம்பரை பிரமஸ்ரீ நா. சிவசுப்ரமண்[illegible]னாசாரியரவர்கள் குமாரர் பாலசுப்ரமண்ய ஐயர் அவர்களால் சூத புராணிகர் நைமிசாரிண்ய வாசிகளுக்கு உபதேசித்த படி சாரமொழியாமற் சுருக்கி எப்பாலருமெளிதினுணரும்படி செந்தமிழ் வசனநடையாக இயற்றித் தோத்திரமும் வரையலாயிற்று.

இங்ஙனம்
சு. பொன்னுச்சாமிப்பிள்ளை
இந்து கலாவிருத்திச் சங்க தனாதிகாரி

உ
சிவமயம்

# இராமேஸ்வரமான்மியம்.

காப்பு

குறள்வெண்பா

சீர்ச்சேது மான்மியத்தைச் செந்தமிழில் யாம்புகலக்
கார்க்கற்பகம்பதங்கள்காப்பு.

சூதபுராணிகரை நைமிசாரிண்யமுனிவர்கள் இராமேஸ்வரத்தினதும் அங்கேயுள்ள தீர்த்தங்களினதும் விசேஷங்களைக் கூறும்படிகேட்ப; கங்கை, கொன்றை மதி, தோல் சர்ப்பம முதலியவைகளைத் தரித்த ஸ்ரீ சாமபசதாசிவ மூர்த்தியாகிய இராமநாதஸ்வாமியை யென்றும்துதிக்கின்ற அம்முனிசிரேட்டர் பின்வருமாறு கூறுகின்றார்.

வர்களும் நைமிசாரிண்ய வாசிகளே முன்னர் வியாஸபகவானிடம் யான்கேட்ட பிரகாரம் […]தேவதலத்திலுள்ள தீர்த்தமூர்த்திதல விசே[…]ங் கூறுகின்றேன்.—

முன்னோர் காலத்தில் த[…]ண்டராவணனென்னும் இராக்ஷஸனைச் […]ரிக்கும்படி ஸ்ரீ மஹாவிஷ்ணுவானவர் தச[…]மகாராஜனுக்குப் புத்திரனாகத் தோற்றி ஜான[…]கியென்னும் மகாலக்ஷ்மியை மணந்துவாழ்கின்ற காலத்திற் குடும்பக்கலகத்தால் ஸ்ரீராமரும் ஜானகியும் இலக்ஷ்மணரும் வனசஞ்சாரஞ் செய்யுங்காலத்தில் ஜானகியாகும் சீதையை இராவணன் திருடித் தன்தேயமாகிய இலங்கையிற் சிறைவைத்தனன். இதைக்கேள்விப்பட்ட ஸ்ரீராமபிரான் சிலவானர சைன்யங்களைக் கொண்டுபோகும்படி வானரசைன்யங்களினாற் செய்விக்கப்பட்ட ஓர்பாலம் அல்லது அணையே சேதுவெனப் படும். இவ்வணைக்கருகாமையில் விசேடித்த தீர்த்தங்கள் பலவுள அவற்றுள் இருபத்தினைந்து மிகமுக்கியமானவை—அவையாவன தனுஷ்கோடி, சர்வதீர்த்தம், சாத்தியாமிருததீர்த்தம், கோடிதீர்த்தம், யமுனை,

கங்கை, கயை, சங்கதீர்த்தம், சிவதீர்த்தம், சக்ர தீர்த்தம், அக்கினிதீர்த்தம், இலக்ஷுமிதீர்த்தம் ஜடாதீர்த்தம், இலக்ஷுமணதீர்த்தம், இராமதீர்த்தம், அகத்தியதீர்த்தம், அனுமகுண்டம், பிரமகுண்டம், அமுததீர்த்தம், மங்கலதீர்த்தம், சீதாகுண்டம், பாவவிநாசம், வேதாளதீர்த்தம், சக்கரதீர்த்த மென்பவையாம்.

இராமஸ்வாமியானவர் அவ்வழியாகத் தன்சைனியங்களுடன் சென்று இராவணன்முதலாகிய வசுரர்களைச் சிதைத்து மீண்டுமவ்வழியாகத் தன்ஜென்மதேசம போகும்பொழுது பிரமகத்திதோஷம் பற்றுதலைக்கண்டு அனுமந்தமூர்த்தியை காசியிலுள்ள இலிங்கங்களி லொன்றைக் கொண்டுவரும்படி பணிக்க அவ்வனுமந்தமூர்த்திகொண்டுவரும்படி சென்றனர்.— முகூர்த்தம் தவறி வருவதையறிந்த சீதாபிராட்டியாரன்புடனே சமீபத்திலுள்ள பிருதிவியைக்கூட்டி லிங்காகாரியாகச்செய்து பிரதிஷ்டையை முகூர்த்தத்திலே நடைபெறும்படி செய்தனள்.

அனுமானானவர் தான்கொணர்ந்த லிங்கத்தைத் தாபிக்கவுத்தேசித்துத் தன்வாலினால், முன்பிரதிட்டிக்கப்பட்ட லிங்கத்தைப்பற்றியிழுக்க முடியாத அவ்வளவு பெலமுள்ளதாகவிருந்தது. இராமஸ்வாமியின் பிரமகத்தி நீங்கினதினால் இராமநாதரென அவ்லிங்கத்திற்குப் பெயராயிற்று.

சக்கரதீர்த்தம் முதலிய தீர்த்தங்களின் விசேஷகுணங்களைச் சுருக்கிக் கூறுவாம்.

சக்கரதீர்த்தம்

முற்காலத்திற் தருமதேவதை ஸ்நானம்பண்ணி விருஷபரூபமானதினால் தருமபுஷ்கரணியெனப் பெயர்பெற்றுப் பின்காலவ மகாரிஷியைக்கொல்லவந்த இராக்ஷஸனைச் சக்கரஞ்சங்கரித்து அத்தீர்த்தத்தில் மூழ்கிப்போனதினாற் சக்கரதீர்த்தமென வழங்கிவருகின்றது.

வேதாளதீர்த்தம்

காலவ மகாரிஷியின் சாபமுற்ற சுதாசனன் வேதாளமாகிக் கனகட்டப்பட்டுப் பின்சங்கற்பித்து இத்தீர்த்தத்திற் றோய்ந்து எழுந்து த

ன்வடிவமாகிய காந்தர்வ வடிவைப் பெற்றனன். அக்காரணம்பற்றி இதற்குவேதாள தீர்த்தமென னப்படும்.

பாவநாசம்

திடமதியென்னும் சூத்திரன் ஓர்பிராமணனினுற்கிரியை வேள்வி முதலியவற்றைச் செய்யும் மந்திரங்களை யறிந்ததினு லிருவரும் அனேக ஜென்மமெடுத்துக் கடைசியிற் பிராமணன் பிராமணப்பிறவியாகவும் சூத்திரன் கழுகுப் பிறவியாகவும் பெற்று இத்தீர்த்தத்திற் தோய்ந்ததினுற் சென்மசாபல்யம் பெற்றனர். ஆதலினுலிதற்கு இப்பெயருண்டாயிற்று. இஃது இருக்குமுறை இப்பொழுது வெற்றிலைமண்டப மென்பார்கள்.

சீதாகுண்டம்

சிறையுற்ற சீதையின் கற்பைக் காட்டவுண்டாக்கிய அக்கினிக்குண்டத்தில் பிரவேசமாகியபின் ஸ்நாநஞ்செய்ய நிருமித்த தீர்த்தம் இதுவாகும்.

## மங்கலதீர்த்தம்

சந்திரகுலத்திலுதித்த புஞ்ஜேச வராசன் செங்கோல்செலுத்தி வருங்காலத்திற் பிராரத்து வப்படி கொடுங்கோல்செலுத்தித் தன்னிராஜ்ஜி யத்தைத்தோற்றுப் பராசரருபதேசம் பெற்று இத்தீர்த்தத்தில் முழுகியநுட்டித்துத் தனமங்க ளமாகிய இராச்சிய பாக்கியத்தைப் பெற்று வாழ்ந்து ஈற்றில் சாயுச்சிய பதவி பெற்றனன்.

## அமுததீர்த்தம்

நாரண மகாரிஷி மோக்ஷம்பெற்றதினு லிப்பெயர்பெற்றது ( அமுதம் மோக்ஷம் )

## பிரமகுண்டம்

பிரமாவிற்குப் பொய்சொன்னதினு லேற்பட்டபாவத்தைத் தீர்க்கயாகஞ்செய்து பூரணுகுதிசெய்த இடமேபிரமகுண்ட மெனப்படும்.

## அனுமகுண்டம்

அனுமார் இராமலிங்கத்தைப் பெயர்க்கும் பொழுது வாலறுந்து விழுந்தஇடமே அனுமகுண்டமெனப்படும்

## அகத்தியதீர்த்தம்

அகத்தியர் விந்தகிரியை யடக்கிபின் இத்தீர்த்தத்தை உண்டுபண்ணி வரப்பிரசாதங்கொடுத்ததினுல் அகத்திய தீர்த்தமெனப்படும்.

## இராமதீர்த்தம்

இராமலிங்கப்பிரதிட்டை செய்தபிற்பாடிராமர்தன் பெயராலொரு தீர்த்தமுண்டாக்கி அயோத்தி அடைந்தனர்.

## இலட்சுமணதீர்த்தம்

இஃது இந்திரசித்துவை வதைத்த பாவந்திரும்படி இலட்சுமணரால் உண்டாக்கப்பட்ட தீர்த்தம். அப்பாபம்திரும்படி ஓர் சிவலிங்கப்பிரதிட்டையும் செய்துள்ளார்.

## ஜடாதீர்த்தம்

இஃது இராமசுவாமியினுலும் அவர்சகோதரர் இலட்சுமணராலும் தங்கள் சடையிலிராக்ஷதரின் இரத்தம்பட்டிருக்குமெனவெண்ணி சடையைக் கழுவதற்கோண்டிய ஓர்தீர்த்தம்

## இலட்சுமிதீர்த்தம்

முன்னோர்கால் விஷ்ணுவைப்பிரிந்த இ

டக்மியானவள் தாம்சிவபூசைபண்ணுதற்கு ஸ்நானம்செய்ய நிருமித்த ஓர்தடாகம்.

## அக்கினிதீர்த்தம்

சீதாபிராட்டியாரின் கற்பைச் சோதித்த அக்கினிபகவான் ஸ்நானம்செய்த இடமே அக்கினிதீர்த்தமெனப்படும் இதில்முழுகுவோர் பாவங்கள்நீயும் பெண்களாயின் கற்புப்பிரகாசிக்கும்.

## சக்கரதீர்த்தமாகிய முனிதீர்த்தம்

முன்னோர்கால் ஓர்முனிவர் தன்முன்பு ஓர்சக்கரத்தைநாட்டி நீவரும்பகைவரை அடக்குவாயாக எனப்பணித்துத் தவத்திலிருந்தனர் அச்சக்கரம் அவரிடத்தில்வரும் பகைவரை ஜெயித்து இத்தீர்த்தத்தில் வந்து மூழ்குவதால் இதற்கிப்பெயராயிற்று.

## சிவதீர்த்தம்

அகத்தியருக்கும் கௌதமருக்கும் சிவபெருமான் கமண்டலத்தால் உண்டாக்கியருளிய தீர்த்தமாம் இதில்முழுகுவோருக்கு இஷ்டசித்தி சீக்கிரம் லபிக்கும்.

சர்வதீர்த்தம்.

பரமசிவனேயோர் வேதியனுக்கு உலகத்திலுள்ள தீர்த்தங்களை யழைப்பித்துக் கொடுத்ததினுலிப்பெயரடைந்தது இராமநாதனென்னுஞ் சிவபெருமான் அழைத்தபடியால் மானஸதீர்த்தமெனவும் வழங்கும்.

தனுக்கோடி.

இராமசாமி தன்கை வில்லினுல் இலங்கைக்கிடையேயுள்ள அணையையுடைத்து இருகடலையுஞ் சேரவிட்ட இடமே தனுக்கோடி யெனப்படும். இந்த 24 தீர்த்தங்களின் மகத்துவங்களை யார்தானளவிடக்கூடும் ஆயிரநாவுடைய ஆதிசேடனுலு முரைக்கற்கரிது. இவைகளை விட இன்னுமனேகந் தீர்த்தங்களுண்டு பாலோடை ஹரிதீர்த்தம் காயத்திரிசரசுவதி இரணவிமோசனம் பாண்டவதீர்த்தம் தேவதீர்த்தம் சுக்கிரீவதீர்த்தம் நளதீர்த்தம் நீலதீர்த்தம் பசுக்கண்ணதீர்த்தம் அங்கததீர்த்தம் கவதீர்த்தம் சரபதீர்த்தம் நரதீர்த்தம் பனசதீர்த்தம் கவயதீர்த்தம் குமுததீர்த்தம் விபீஷணதீர்த்தம் வீரதீர்த்தம் வீரசேதுமாதீர்த்தம் நாரதீர்த்தம் நாரணியதீர்த்

தம் நாகதீர்த்தம் பிரமகத்திவிமோசனம் ஆகிய தீர்த்தங்கள் முக்கியமானவை.

கேளுங்கள் நைமிசாரிண்யவாசிகளே இந்த னுங்கோடியிற் றோய்ந்து ஜென்ம சாபல்யமுற்ற ஓர்சரிதையைச் சொல்லுகின்றேன —

கோதாவரியென்னுமாற்றங்கரையில் வாழ்ந்த ஓர்விப்பிரன் தன்நியமநிட்டைகளை யொழித்துப்பதிதனாகி அனேகபாதகரோடு கூடித் துற்கிரியைகளைச் செய்துவந்தநிலையிலே ஓர்வேதாளம்பிடித்து இரவுபகலின்றிச் காடுமேடுமுதலிய வித்தியாசமின்றி யெங்குங்கொண்டுதிரிந்து கற்றில் தனுக்கோடிநகருகிற் கொணர்ந்துசேர்த்தது.

வேதாளமிவ்விப்பிராமணனைக் கடலுமிழுத்தவெண்ணி மூழ்த்தும்போது அவ்வேதாளம் தான் புண்ணியகாலமாகிய மாளயபக்ஷத்திற் திலதர்ப்பணம் செய்யாததோஷத்தினாற் பெற்றசாபவுருவை நீங்கி அனந்தசயனத்திலிருக்கும் ஸ்ரீமலட்சுமி மகாலட்சுமி சமேத மகாவிஷ்ணுவின்பதமாகிய வைகுந்தமடைந்தது — இவ்விப்பிரன் தோய்ந்தெழுந்தவுடன் பரிசுத்தனாகி இவ்விட

ம்லந்தகாரணத்தை யோசிக்கும்போது தத்தாத்திரேய முனிவரிவன் பூர்வ விருத்தாந்தங்களைத் கூறி யவன்தேசத்திற் போய்க்கிரமமாக வாழும்படி பணித்தனுப்பினர். அவ்வுத்தரப்படி தன் தேசம்போய் மாளயசிரார்த்தாதி கிரியைகளைக் கிரமப்படி நடாத்தி யிற்றிற் சென்மசாபல்யமுற்றனன்.

மாளயசிராத்தம்

மகாளயவிதினைச் சுருக்கிக் கூறுகின்றேன்.—

தாய்தந்தையர் மரித்த திதிகளிற் சிரார்த்தஞ்செய்யாவிடினும் மாளயசிரார்த்தஞ் செய்ய வேண்டிய தவசியம்.

மாளயம் ஆடி முதல் வருமைந்து பக்ஷங்களுக்குட் செய்ய வேண்டியது

மாளயத்திற்குப் புரட்டாசிமாசத்து அபரபக்ஷமே மிகுசிலாக்கியமுள்ளது, இப்பக்ஷத்தில் யாதாயினுமிடையூறுண்டாயின் அதன்பின்வரும் திதிகளிலியற்று

இச்சிராத்தத்திலொன்பது வேதியற்குத் திருப்திசெய்தல்வேண்டும் இச்சிரார்த்தஞ் செய்யஇயலாதான் வேதியனிடத்தாயினு மரசரிடத்தாயினும் வணிகரிடத்தயினுமா சூத்திரரிடத்தாயினும் யாசித்து இயற்றுக.

மேற்கூறியவனைத் தியலாதாயின் பசுக்களி ன்வயிறாப் புல்முதலியவுணவு ஈய்ந்துபோஷிக் கவேண்டியது இதுவுமாற்றாதாயின் பிதுர்க்களை வணங்கவேண்டியது.

இவ்விதியிற் சொல்லியபடி தந்தம்தகுதி க்குதகுந்தபடி செய்யவேண்டியது

சேதுமாதவர்வரலாறு

கேளுங்கள் நைமிசாரிண்யவாசிகளே இத்தி வ்வியதலத்தி லெழுந்தருளியிராநின்ற லோகர க்ஷகரும் நாசிங்கவதாரவுருப்பெற்று இரணிய னைச் சங்கரித்தவரும் ஸ்ரீலட்சுமி மகாலட்சுமிச மேதராகவுள்ளவருமாகிய சேதுமாதவரின் மகி மையோ மிகஅளவிறந்தன அவற்றைச்சிறிதுகூ றுகின்றேன். அதைநீங்கள் மிகுசிரத்தையுடன் கேட்டு ஆனந்தமடைவீர்களாக —

சொக்கலிங்கமூர்த்தியின் ஜடாபாரத்தில் என்றும் பிரகாசிக்கின்ற சந்திரன்குலத்தி லுதி த்து இராச்சியபரிபாலனம் பண்ணியபுண்ணிய நிதியென்னும் பாண்டியன் தன்தேவியுடன் இரா மசேதுவையடைந்து விஷ்ணுவைக்குறித்து ஓர் வேள்விசெய்தனன் இதையறிந்த இலட்சுமி ம

ஹாவிஷ்ணுவிடத்திற் றெரிவிக்க அன்னவர்சீற்
றமுற்றதைக்கண்டு ஓர்சிறு பெண்குழந்தையாக
பாண்டியன் முன்றோற்ற அன்னவன் தன்மைத்து
னியாகிய விந்தாவலி யென்பவனிடமிருந்து நாளொ
ருவண்ணமும் பொழுதொருவண்ணமுமாக வள
ர்த்துவந்தனன்.

மகாலட்சுமியைப் பிரிந்தமாதவர் எங்குந்
தேயு சற்றில கந்தபாதனத்திற் சேடியருடன் பூ
க்கொய்யும் மகாலட்சுமியைச் சிவவேடத்துடன்
சென்றுபற்றியிருக்க அதையறிந்த பாண்டியன்
ஓர் அறையிலவ் வேதியனைப் பூட்டுப்படி பணித்
தனர்

அவ்வண்ணஞ் சிறையுற்ற திருமாலானவ
ர் பாண்டியன்கனவிற் றோற்றியருளினர் கனக்
கண்டபாண்டியன் அருணோதயத்தில் எழுந்து
தன்பரிசனருடன் சிறைச்சாலைக்குப்போய் மகாவி
ஷ்ணுவை நமஸ்கரித்துத் தன் அறியாமையைக்ஷ
மிக்கும்படி வேண்ட அநந்தசயனனான மகாவி
ஷ்ணுவானவர் பின்வருமாறுகூறி மறைந்தருளி
னர் —வாராய் சந்திரகுலத்துதித்த பாண்டியரா
சனே நீமேற்கொண்ட பக்தியினாலேயே இவ்

களிலாடி இலட்சுமண தீர்த்தக் கரையடைந்து க்ஷவரஞ்செய்விக்கிற்செய்வித்து அத்தடாகத்தி ற் படிந்து இராமதீர்த்தத்தில் மூழ்கி, பூமி பொ ன் முதலிய தானங்களீந்து பாவநாசத்திற் படி ந்து பின் கங்கை கயை யமுனை இவைகளிலாடி த் தமமாலியன்ற தானங்கள் வளங்கி சாவித்திரி சரசுவதி காயத்திரி அனுமகுண்டம் பிரமகுண் டம் நாகதீர்த்தம் அகத்தியதீர்த்தம் இவைகளி ல் மூழ்கி, அக்கினிதீர்த்தக் கரையை நணுகி அ தில் நானமாடிய, பிதிர்கடன்களை நடாத்தி அங் கு வேதப்பொருளை நனகுணர்ந்த பெரியோர்க ட்கு தசதானங்களை வளங்கி இராமலிங்கத்தை வழிபட்டுப பின் சேதுமாதவனைப் பாவி இரா மர் சானகி இலட்சுமணர் இவர்களைப்பணிந்து தனுக்கோடி கோடிதீர்த்தம் இரண்டு மொழிய மற்றைய தீர்த்தங்களிலெல்லாம் தோய்ந்து மீட் டும் இராமலிங்கத்தை மனப்பூர்வமாக வழிபட்டு கோடிதீர்த்தத்திற படிந்து அங்ஙன் லோபமின் றி இயன்ற பட்டும் தானங்கள் வளங்கி இராம நாதசுவாமியையும் பருவதபத்தினியம்மனையும் பணிந்து வலம் வந்து, நாவாரவாழ்த்தி யனுமதி

ற்று, சேதுமாதவரை நமஸ்கரித்துத் தம பதி ஞுகி, பிராமணர்க்குப் போசனம இயன்ற ட்டும் செய்து சற்காலங்களிப்பதே மிகு புண் ணியமாம்.

மாசி மாசத்திலும் சூரிய சந்திர கிரகண காலங்களிலும், அமாவாசையிலும் பூரணையிலு ம் திங்கட்கிழமை கூடிய பூரணை காலத்திலும சங்கிரமகாலத்திலும் தட்சிணுயன உத்தராயண புண்ய காலங்களிலும் சதுர்த்தசியிலும ஏகாத சியிலும் மாசி மாதஉதயகாலத்திலும இரதிநு கரம்கோததி எனப்படும் சேது தனுக்கோடி தீர்த்தமாடினுல் மிகுதியாகிய பலனைக் கொடுக் கும.

மாசிமாசத்தில் 3 5 10 15 20 25 30 தினமளவிலும் தொடர்ச்சியாக உதயகாலத்தில் நானமாடுவதினுலும் ஒன்றற்கொன்று விசேடித் த பலனைக் கொடுக்கும்.

இன்னமுங் கேளுங்கள் நைமிசாரணிய வாசிகளே, அர்த்தோதய மகோதய புண்யகால

களில் ஸ்நானமாடின் லபிக்கும் பலனை யார்தாம் மதிப்பிடக்கூடும்.

ஆத்மோதய மென்பது திருவோணமும் அமாவாசையும் வ்யதீபாதயோகமும் ஆதித்ய வாரமும் தைமாசத்தில் கூடிவருங்காலமாம்.

மேற்குறித்த நக்ஷத்திராதி மூன்றும் நீங்கி பூசம் கூடிவரின் மகோதயமெனப்படும்.

இந்தப் புண்ணிய காலங்களில் எவ்விடத்திலேயாயினும் இராம தனுக்கோடியை சிந்தித்து ஸ்நானமாடின் அப்புண்ணியம் லபிக்குமென்பது சாமான்யசம்மதம்.

எவனொருவன் மற்றவனை உன்னி ஸ்நானமாடின் அவனுக்கும் அப்பலனுண்டாகுமென்றும் கூறப்பட்டிருக்கின்றது.

மரித்தவனைக் குறித்து மட்டும் ஸ்நானமாடக்கூடாது.

இறந்தவர்களை எண்ணி ஸ்நானமாட விரும்பின் தருப்பையினாலேனும் பொன்னினாலேனும் நிருமித்துப் பெரியோர்களால் பிராணப்பிரதிஷ்டை செய்வித்து தீர்த்தத்தில் விட்டு முழுகலாம்.

அமாவாசையிலும் பூர்ணையிலும் சமுத்திரஸ்நானம் செய்யவேண்டியது.

மற்றைய காலங்களிற் தீண்டவுங்கூடாது.

தீர்த்த யாத்திரையில் சற்பாத்திரர்களுக்கு அன்றி மற்றோர்களுக்குத் தானங்கொடுக்கக் கூடாது. ஈந்தால் உடனே பாபம் வசிக்குமென்பது சகலசாஸ்திரசம்மத மென்பது யாருமறிந்த விஷயமே.

சில புத்திமான்கள் பொருள் போகின்ற இடம்புண்ணிய மென்கிறார்கள். ஊதாரிகளிடத்திற் கிட்டுமாயின் அதனால் வருங்கெடுதிகளை விடற்பாலது

மேலுங்கள் நைமிசாரிண்ய வாசிகளே அப்பதிதருக்கு அளிப்பதினால் வருங்கெடுதலைச் சுருக்கிக் கூறுகின்றேன்- கொலை களவு பொருமை மித்திரபேதம் காமம் புலாலுண்ணல் பரோபகாரிகளை நிந்தித்தல் சண்டையிடுதல் புராண இதிகாசாதி சாஸ்திரங்களைநிந்தித்தல் முதலிய இன்னுஞ்சாற்றுதற்கரிய கொடுமைகளுக்குக் காலாயிருக்கின்றது என்பதைக் கவனிப்பீர்களாக.

சீர்பாத்திரர்க ளகப்படாவிடின் அவர்களிருக்கு மிடந்தேடி அவர்க்கீயவேண்டு மன்றேல் கிராப்பணஞ் செய்ய வேண்டியது.

சேதுமான்மியத்தை யாவருமன்புடன் வாசித்து அல்லது படிக்கக் கேட்டிருக்கவேண்டு மென்று சூதபுராணிகர் சொல்லி இன்னமுஞ் சொல்லுகின்றார் கங்கையிலறுபது ஆயிரவருடம் ஸ்நானமாடின பலனையும் பிரயாகையிலர்த்தோதய மகோதயத்தில் ஆயிரந்தடவை ஆடிய பலனையும் மூன்றுலகங்களிலுமுள்ள தீர்த்தங்களிலுமடைந்த புண்ணியத்தையும் ஒரு இரத்நாகர மகோததி சங்கமத்தில் ஸ்நானமாடின் பெறலாம்.

மந்திரங்களை மறந்தபாபமிருந்து உச்சரிக்காத பாபமும் குருபூசை சிவபூசை செய்யாத பாபமும் பஞ்சமாபாதகமும் தனுஷ்கோடி முதலிய தீர்த்தங்களிற் படிதலினால் ஒழியுமென்பது திண்ணம்.

தனுக்கோடி தீர்த்தத்திலாடின் வேதாந்த சித்தாந்த விவேகத்தை விளக்கி புண்ணியங்களை

சம்பாதித்து நாலு புருடார்த்தங்களையுமடையச் செய்யும்.

கேளுங்கள் முனிவர்களே இந்த மான்மியத்தை அனேகிய சமயிகட்கு உரைத்தலாகாது. இதில் முழுதும்போது ஹரா என்னும் சிவநாமத்தினதும் உமா என்னும் தேவி நாமத்தினதும் கடையெழுத்துக்களால் வரும் ராமா என்னும் மந்திரத்தைப் பிரணவ சகிதம் செபிக்கவேண்டும்.

---

# இராமேஸ்வராட்டகம்

திருவளரயோத்தியாளுந்தெசரதராமசாமி
கருவளர்தசக்கிரீபன்கருதுபோர்வென்றபின்னர்
உருவளர்பிரமகத்தியொழித்திடப்பூசைசெய்யு
மருவளரிராமநாதன்மலரடிபோற்றிபோற்றி

கொன்றையுமறுகுமத்தங்கூவிளைநதியுந்திங்கள்
பொன்றிகழ்சடைமேற்கொண்டபூரணன்கருணை
வெள்ளம்
துன்றியவானோர்யோகர்துறவருக்கருளுமாற்றின்
நன்றுளரிராமநாதன்நளினபொற்பதங்கள்போற்றி

அதிபதிமிதிலையாண்டவற்புதச்சனகராசன்
மதிபெருந்தவத்தில்வந்தமாணிளை அமுதச்செவ்வாய
விதிநுதற்சீதைசெய்தவியத்தகுமிலிங்கமேனி
நிதிபதிஇராமநாதனிறையவன்பாதம்போற்றி

எண்ணருசிவத்தலங்களெளில்வரையுகந்திட்டாலும்
புண்ணியகரமாயென்றும்பொலிந்தராமேச்சரத்தின்
வண்ணமாரமுதச்செவ்வாய்மலைவளருமையினோடும்
தண்ணளிபெருக்குமராமநாதனின்சரணம்போற்றி

உடைதிரைமகோததிக்கண்ஒங்குராத்னகரந்தான்
விடுமணிமாலையாகமேற்கொளுமனுதிமூர்த்தி
விடையினன்மதியமோங்கிவிளங்கியசடையனெம்மான்
படிபுகழ்ராமநாதன்பதமலர்போற்றிபோற்றி

சிந்தையாலழுத்தற்கெட்டாச்செம்பொருடானேயாகி
மந்திரமயமாம்நீலகண்டனேமழுமானேந்தும்
எந்தையேஅனந்தானந்தஇறைவனேஉலகமான
தந்தையேராமநாதத்தலைவனேபோற்றிபேற்றி



எவ்வகைப்பொருளுந்தானே என்வருளினிதுகாட்டுஞ்
செவ்வியார்சீதைசெய்தசிவலிங்கமிருத்திகைக்கட்
தவ்வறவிளங்குமாதிசங்கரசயம்புமூர்த்தி
செவ்விசாரிராமநாதச்செல்வனேசரணம்போற்றி

அரியரனியற்றும்பூசைஅம்மைசெய்யாதம்பூசை
பொருவருமிராமன்றம்பிபூசனைபுலவர்செய்த
அருமையார்பூசைகொண்டஆண்டகைஎம்மையாண்ட
திருமலியிராமலிங்கச்செல்வனேபோற்றிபோற்றி

நூற்பயன்.

சிந்தைசெய்மெய்யன்போடுசேதுராமேசுரத்திற்
சுந்தரமான்மியத்தைசொல்பவர்கேட்கின்றோர்கள்
இந்திரராகிவாழ்ந்தேஇன்பங்களனேகமுற்றி
எந்தையாமிராமலிங்கரிருபதிமுளரிசேர்வார்

